உ

# இறையடியார் வரலாறு

53



இறைவன் கழலேத்தும்
இன்பமே இன்பம்



திருவருட் கழகம்
புதுவயல்

வெளியீடு எண் ௬



உ

சிவமயம்

# இறையடியார் வரலாறு

செல்வன் **சின்னுன்செட்டி**

செல்வி **உமையாள்**

## திருமண மலர்

**சோபகிருது ஸு வைகாசிமீ ௧௨௨**

*26—5—63*




**திருவருட்கழகம்**

புதுவயல்

உ

சிவமயம்

# நன்றி

பாண்டி நாட்டில் கண்டனூரில்

*"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்*
*தெய்வத்துள் வைக்கப்படும்"*

என்ற வள்ளுவர் வாக்கிற்கு இலக்கியமாய் கடவுள் பக்தியும், அடியாரிடத்துச் சிறந்த பேரன்பும் பூண்டு அநேக அறப்பணிகள் புரியும் உள்ளன்பும் வள்ளன்மையுமுடைய உயர்திரு சி. நெ. வீர. சி. வீரப்ப செட்டியார், அவர்கள், தம் புதல்வன், திருநிறை செல்வன், சின்னன் செட்டிக்கும், கொத்தமங்கலம் ராம. சு. ராம. சுப்பிரமணியன் செட்டியார் புதல்வி திருநிறை செல்வி உமையாளுக்கும் சோபகிருது ஆண்டு வைகாசித் திங்கள் 12ம் நாள் திருமண விழாவில் இம் மலரை அன்பளிப்பாக வழங்கும் அவர்கட்கும் நூன்முகம் தந்த தமிழ்க் கடல், சிவமணி, சிவம் பெருக்கும் சீலர், சிவபூசைச் செல்வர், உயர்திரு ராய. சொ. அவர்கட்கும் இவ்வெளியீடு இனிதின் நிறைவெய்த உறுதுணையாயிருந்த திரு மு. வினைதீர்த்தான் செட்டியார் அவர்கட்கும் எங்கள் உளங்கனிந்த நன்றி.

சோபகிருது
வைகாசி
கஉ
புதுவயல்

வாழ்க மணமக்கள்

**அ. ந. உ. வீ. அழகப்ப செட்டியார்**
செயலாளர்
திருவருட்கழகம்

உ

சிவமயம்

# நூன் முகம்

*''கண்ணுவாரேனும் உனைக் கைகுவியாராயின் அந்த மண்ணுவார் நட்பை மதியேன் பராபரமே,''*

என்று அருளினர், தாயுமானப் பெரியார், மண்ணுவார் வரிசையில் சேராமல் வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து இறைவனடி சேர்ந்த அடியார் பலரின் வரலாற்றை இந் நூல் சுருங்கக் கூறுகின்றது.

இறைவனடியார் காதைகளை அறிந்து கொள்வது மாபெரும் பயன் நல்க வல்லது இப்பணியை புதுவயல் திருவருட் கழகம் செய்கின்றது.

இந்நூல் சைவ,' வைணவ, வேறு பாடின்றி, இறையடியார், என்ற ஒரே குறிக்கோளோடு எண்பத்தாறு, அடியார்கள், வரலாற்றை எடுத்துரைக்கின்றது. இச் சிறந்த நூலை கண்டனூர் அன்பர் சி. நெ. வீர. சி. வீரப்ப செட்டியார் தமது மைந்தன் சின்னன் செட்டி திருமணத்தில் வழங்கிப் புகழ் பெறுகின்ருர்; இன்ன முயற்சியை, மெய்யன்பர் பெரிதும் வரவேற்பர். இந்நூல் வெளியீட்டுக்குக் காரணர்களாக இருந்த மணமக்களும் திருவருட் கழகமும் எல்லா நலனும் பெற்றுப் பல்லாண்டு, பல்லாண்டு, வாழ்க.

காரைக்குடி<br>20—5—63

ராய. சொ.

சிவமயம்

## சிவன் அருள்

கற்பகத்தின் பூங்கொம்போ காமன்தன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்
சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ
அற்புதமோ சிவனருளோ அறியேன் என்றதிசயித்தார்

## மெய் அருள்

முன்னேவந்து எதிர்தோன்றும் முருகனோ பெரு
கொளியால்
தன்நேரில் மாரனோ தார்மார்பின் விஞ்சையனோ
மின்னேர் செஞ்சடை அண்ணல் மெய்யருள்
பெற்றுடையவனோ
என்னே என்மனம் திரித்த இவன்யாரோ என
நினைந்தார்

(சேக்கிழார்)

## திருமணக்காட்சி

நங்கைஎன் நோற்றாள் கொல்லோ நம்பியைத்
திளைத்தற் கென்பார்
மங்கையை மணப்பான் என்னோ வள்ளலும்
நோற்றான் என்பார்
எம்கடி மதுரை என்னோ ஆற்றிய தவந்தான் என்பார்
இங்கிவர் வதுவைகாண்பான் என்னநாம் நோற்றோ
மென்பார்.

(பரஞ்சோதி முனிவர்)

## ஆண்டாள் கனவு

I வாரணமாயிரம் சூழவலம் செய்து
நாரண நம்பி நடக்கின்ருனென்று எதிர்
பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும்
தோரணம் நாட்டக் கனுக் கண்டேன் தோழி நான்

2 நாளைவதுவை மணமென்று நாளிட்டு
பாளை கமுகு பரிசுடைப் பந்தற்கீழ்
கோளரி மாதவன் கோவிந்தன் என்பான் ஓர்
காளை புகுதக் கனுக் கண்டேன் தோழி! நான்

3 இந்திரனுள்ளிட்டதேவர் குழாமெல்லாம்
வந்திருந்து என்னை மகட்பேசி மந்திரித்து
மந்திரக்கோடியுடுத்தி மணமாலை
அந்தரி சூட்டக் கனுக்கண்டேன் தோழி! நான்

4 நால்திசைத் தீர்த்தம் கொணர்ந்து நனிநல்கி
பார்ப்பனச்சிட்டர்கள் பல்லாரெடுத்தேத்தி
பூப்புனை கண்ணிப் புனிதனேடு என்தன்னை
காப்புநாண் கட்டக் கனுக்கண்டேன் தோழி நான்

5 கதிரொளி தீபம் கலசமுடனேந்தி
சதிரிளமங்கையர்தாம் வந்து எதிர்கொள்ள
மதுரையார் மன்னன் அடிநிலை தொட்டு எங்கும்
அதிரப் புகுதக் கனுக்கண்டேன் தோழி-நான்

6 மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத்தாமம்நிரை தாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதன் வந்து என்னைக்
கைத்தலம்பற்றக் கனக் கண்டேன் தோழி–நான்

7 வாய் நல்லார்-நல்லமறையோதி மந்திரத்தால்
பாசிலை நாணல்படுத்துப் பரிதிவைத்து
காய்சினமா களிறன்னான் என் கைப்பற்றி
தீவலஞ்செய்யக் கனக்கண்டேன் தோழி–நான்

8 இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும் பற்றாவான்
நம்மையுடையவன் நாராயணன் நம்பி
செம்மையுடைய திருக்கையால் தாள்பற்றி
அம்மி மிதிக்கக் கனக் கண்டேன் தோழி–நான்

9 வரிசிலை வாள்முகத்து என்னைமார் தாம்வந்திட்டு
எரிமுகம் பாரித்து என்னை முன்னே நிறுத்தி
அரிமுகன் அச்சுதன் கைமேல் என்கைவைத்து
பொரிமுகந்தட்டக் கனக் கண்டேன் தோழி–நான்

10 குங்குமம் அப்பி குளிர்சாந்தம் அட்டித்து
மங்கலவீதி வலம் செய்து மணநீர்
அங்கவனோடும் உடன் சென்று அங்கு ஆனைமேல்
மஞ்சனமாட்டக் கனக் கண்டேன் தோழி–நான்

11 ஆயனுக்காகத் தான் கண்டகனவினை
வேயர் புகழ் வில்லிபுத்தூர்க் கோன்கோதை சொல்
தூயதமிழ் மாலை ஈரைந்தும் வல்லவர்,
வாயும் நன்மக்களைப் பெற்று மகிழ்வரே.

ஆண்டாள் திருவடிகளே சரணம்

உ

## மாணிக்கவாசகர்

### பாண்டிநாடு திருவாதவூர் அந்தணர்

அரிமர்த்தன பாண்டியனின் முதல் மந்திரியாகி அரசன் கட்டளைப்படி குதிரைகள் வாங்க அளவற்ற திரவியத்தோடு கீழ்க்கடற்கறைக்குச் செல்லும் வழியில் திருப்பெருந்துறை என்னும் ஆவுடையார் கோயிலை அடைந்து அங்கு சிவபெருமான் குருந்த மரத்தின் கீழ் ஞானசிரியராய் எழுந்தருளி வாதவூரருக்கு உபதேசம் செய்து மாணிக்கவாசகர் என்னும் திருநாமம் சூட்டப் பெற்றனர். கொண்டுவந்த திரவியங்களைக்கோயில்திருப் பணிக்காகச் செலவிட்டனர்.மாணிக்கவாசகர் திருவாசகத் தீந்தமிழ்ப் பாடல்கள், சிவபெருமானைத் திருவருள் சுரக்கச்செய்து, நரிகளைக்குதிரைகளாகவும், அவரையே அக் குதிரைகளுக்குத் தலைவராகவும் வருமாறு செய்தன. அன்று இரவே அக்குதிரைகள் எல்லாம் திரும்பவும் நரிகளாகிவிட' மன்னன், மணிவாசகரை ஆற்றின் சுடுமணலில் நிறுத்தித் துன்புறுத்தியதற்கு இரங்கி வைகை ஆற்று வெள்ளம் பெருக்கெடுக்கச் செய்தனர். பக்தியில் சிறந்த வந்தி என்னும் பிட்டு வாணிச்சிக்காகச் சிவபெருமான் கூலியாளாக வந்து மண் சுமக்கும்போது பாண்டியனால் அவரது முதுகில் அடித்த அடி மக்களனைவர் முதுகிலும் உரைத்தன.

ஈழநாட்டு மன்னனின் ஊமை, மகளைப்பேசும்படி செய்தது மன்றி சைவசமயத்தை இகழ்ந்து பேசிய புத்த சமயத்தவரை. ஊமைகளாகவும் செய்து இன்னும் செயற்கரிய அற்புதங்களைச் செய்திருக்கின்றன.

சிவபெருமான், அந்தணராகவந்து மாணிக்கவாசகர் அருளிய திருவாசகத்தையும், திருக்கோவையாரையும், தன்கையால் எழுதி கைச்சாத்திட்டுத் திருவம்பலப்படியில் வைத்து மறைந்தருளினர். பின் தம்மையடைந்து திருவாசகத்திற்குப் பொருள் கேட்டவர்களுக்குச் "சிற்றம்பலவனே" என்று சுட்டிக்காட்டிச் சபையின் உள்ளே புகுந்து இரண்டறக் கலந்தருளிஞர்,



உ

சிவமயம்

# பெரியபுராணம்

திருச்சிற்றம்பலம்

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்

சோதி முத்தின் சிவிகைசூழ் வந்துபார்
மீது தாழ்ந்துவெண் ணீற்றொளி போற்றிநின்று
ஆதி யாரு ளாதலின் அஞ்செழுத்து
ஓதி யேறின ருய்ய வுலகெலாம்

என்று மின்பம் பெருகு மியல்பினால்
ஒன்று காதலித் துள்ளமு மோங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கு நிலவி யுலகெலாம்

திருச்சிற்றம்பலம்

—சேக்கிழார்

பெரியபுராணத்துள் உயிர்போல்சிறந்து விளங்கும் இம்மூன்று திருவிருத்தங்களையும் பொருளுணர்ந்து மெய்யன்புடன் பாராயணம் செய்தால் பெரியபுராணம் முழுமையும் பராயணம் செய்த பலன் சித்திக்கும் என்பது பெரியோர்கள் கருத்து

## 1 தில்லைவாழ் அந்தணர்

திருக்கைலையிலிருந்து தில்லையில் (சிதம்பரம்) நடராஜப்பெருமானுக்கு வழிபாடு புரியும் நோக்கத்துடன் வந்த சிவகணத்தவர் மூவாயிரவர்.

## 2 திருநீலகண்ட நாயனார்

சோழநாடு சிதம்பரம் குயவர்

அடியார்கட்குத் திருவோடு(உண்கலம்)உதவியவர், மனைவியார் இறைவன்பேரில் இட்ட ஆணையின்படி அயலறியா வண்ணம் தனித்த இல்வாழ்க்கை நடத்தி இளமை கழித்தவர். சிவபெருமான் இவர்களின் ஒழுக்கத்தை உலகறியச் செய்து முதுமை நீக்கி இளமைப் பருவம் பெறச்செய்தார்.

## 3 இயற்பகை நாயனார்

சோழநாடு காவிரிப்பூம்பட்டினம் வணிகர்

இல்லை என்னாது ஈந்தவர். அடியவர் வேடத்தில் (இறைவன்) இவர் மனைவியைத் தரும்படி கேட்க மனமுவந்து அளித்து மீண்டும் மனைவியை அடைந்த அரும்பேறு பெற்றவர்.

## 4 இளையான்குடிமாறர்

பாண்டியநாடு இளையான்குடி வேளாளர்

அமுதளித்தவர். வறுமை மிக்க காலத்தில் அடியார்களுக்கு உணவளிக்க வகையில்லாத நிலையில் வந்த அடியார்களுக்குச் சமைப்பதற்கு அன்றுகாலையில்வயலில்

விதைத்த நெல்லை மழை பெய்யும் நள்ளிரவில் சென்று அரித்து வந்து வறுத்துச் சமைக்கச்செய்து அன்னமிட்டு அருள் பெற்றவர்.

### 5 மெய்ப்பொருள் நாயனர்

நடுநாடு திருக்கோவலூர்

(திருவண்ணமலைப் பகுதி) சிற்றரசர். சிவனடியார்களின் திருவேடமாகிய விபூதி ருத்ராட்சம் அணிந்தவர்களைச் சிவனடியார்கள் என்று வணங்கியவர். பகைமை கொண்டு மாற்றரசன் வஞ்சனையாக விபூதி ருத்ராட்சம் தரித்து வந்து வாளால் குத்தினன். அப்போது சிவச்சின்னம் அணிந்த இவர் நம் தமர் என அவரை மன்னித்து இறைவனடி சேர்ந்தவர்.

### 6 விறன்மிண்ட நாயனர்

மலையாளநாடு செங்குன்றூர் வேளாளர்

திருவாரூர்த் தேவாசிரிய மண்டபத்தில் வீற்றிருந்த சிவனடியார்களைச் சுந்தரமூர்த்தி நாயனர் வணங்காமல் செல்வதைக்கண்டு,சிவனிடம் பற்றில்லாதவராகமதித்து அவரையும் வலிய ஆட்கொண்டபெருமானையும் நமக்குப் புறம்பு எனச் சொன்னர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் அறிந்து திருத்தொண்டத் தொகை பாடிப் பணிந்து இவர் சிவ கணத் தலைவராகும் நிலையைப் பெற்ருர்.

### 7 அமர்நீதி நாயனர்

சோழநாடு பழையாறை வணிகர்

கோவணமும், உணவும் அளித்துவந்தார். பிரமச்சாரியாக ஒருவர்வந்து கோவணத்தை அவரிடம்கொடுத்து பத்திரப்படுத்தி வைக்கச்சொல்லி நீராடச்சென்றுமாயையால் மறைத்த கோவணத்தைத் திரும்பக் கேட்டார்.

காணுமையால் பிரமச்சாரியிடம் இருந்த மற்ருெரு கோவணத்துக்கு நிறையாக மனைவி மக்கள் சொத்துக் களைத் தராசில் ஏற்றியும் போதாததால் தானும் ஐந் தெழுத்தோதி ஏறி நிற்கத் தராசே விமானமாக மாறி சிவலோகம் சேர்ந்தனர்.

### 8 எறிபத்த நாயனுர்

கொங்குநாடு - கருவூர்

சிவனடியார்களுக்கு இடையூறு நேராமல் தடுத்து பணி செய்து வந்தனர். அரசனின் பட்டத்து யானை அடி யாரின் புஷ்பக்குடலையை இழுத்துக்கொட்டினமைக்காக அதன் துதிக்கையையும் பாகர்களையும்வெட்டினுர்.அரசன் அதுகண்டு தன்னையும் வெட்டச்சொல்ல, வாளை வாங்கி இவரையே மாய்த்துக்கொள்ள எத்தனித்தார். இறை வன் காட்சிகொடுத்து எல்லோரையும் மகிழ்வித்தார்.

### 9 ஏனுதிநாத நாயனுர்

சோழநாடு எயினனூர் சான்ருர்

வாள்வித்தை ஆசிரியர் விபூதி தரித்தவர்களைச் சிவ மாகஎண்ணி வழிபடுபவர்.மற்ருெரு வாள்வித்தை ஆசிரி யர் வஞ்சனையாக வெல்ல எண்ணி, விபூதியைத் தரித்துக் கேடயத்தால் மறைத்துக் கொண்டு யுத்தம் செய்யும் சமயம் கேடயத்தை நீக்கி விபூதியைக்காட்ட அவரையும் சிவமாகவே கருதி யுத்தம் செய்யாமல் பகைவன் கருத் தை நிறைவேற்றி சிவபெருமான் அருள் பெற்ருர்.

### 10 கண்ணப்ப நாயனுர்

தொண்டைநாடு-உடுப்பூர்-வேடர்-(திருக்காளத்தி)

ஆறேநாளில் அன்பு கொண்டு இறைவனுக்கு தன் இரு கண்களையும் எடுத்து அப்பி அருள் பெற்றவர்.

### 11 குங்கிலியக்கலய நாயனர்

சோழநாடு திருக்கடவூர் அந்தணர்

குங்கிலியத்தூபத்தொண்டுசெய்துவறுமையடைந்து உணவு வாங்க மனேவியார் தந்த திருமாங்கிலியத்தை விற்று அதற்கும் குங்கிலியம் வாங்கியவர். திருப்பனந் தாளில் தன் கழுத்தில் கயறு பூட்டி இழுத்து சிவலிங் கத்தை நிமிர்த்தி இறையருள் பெற்றவர்.

### 12 மானக்கஞ்சாற நாயனர்

கஞ்சனூர் வேளாளர் (சோதிநாடு சேனதிபதி)

கல்யாணப் பெண்ணுகும் தன்மகளின் கூந்தலேக் கொய்து, சிவனடியாருக்குக் கொடுக்க இறைவன் காட்சி கொடுத்து கூந்தலே வளரச் செய்து மணம் நடத்தியவர்.

### 13 அரிவாட்டாய நாயனர்

சோழநாடு கணமங்கலம் வேளாளர்

நாள்தோறும் செந்நெல் அரிசியும் செங்கீரையும் மாவடுவும் வழக்கம்போல் சிவாலயத்திற்கு கொண்டு செல்லும்போது பசியினுல் தள்ளாடி கீழே விழுந்ததில் அவைகள் பூமியின் வெடிவில் கொட்டிவிட்டன, இன்று நிவேதனம் செய்யமுடியவில்லேயே என கழுத்தை அரி வாளால் வெட்டிக்கொள்ளத் துணிந்ததும், இறைவன் மாவடுவைக் கடித்து உண்ணும் ஓசையும் உண்டாக்கி ஆட்கொள்ளப் பெற்றவர்.

### 14 ஆனய நாயனர்

மழநாடு மங்கலவூர் இடையர்

பஞ்சாக்ஷரத்தை புல்லாங்குழலில் இசைத்து சிவ பெருமான் அருள் பெற்றவர்.

### 15 மூர்த்தி நாயனர்

பாண்டிநாடு மதுரை வைசியர்

சந்தனத் தொண்டுசெய்து சமணர்களின் இடையூ றினல் முட்டுப்பட்ட காலத்து சந்தனக் கட்டையாகத் தன் முழங்கையை உரைத்தவர். சிவனருளால் மறு தினமே பாண்டியஅரசனுகி சடாமுடிவிபூதி ருத்ராக்ஷ தாரணராய் அரசாண்டு முக்திபெற்றவர்.

### 16 முருக நாயனர்

சோழநாடு திருப்புகலூர் அந்தணர்

நித்திய கர்மவிதிகளின்படி ஒழுகி புஷ்பத்தொண்டு செய்து திருஞானசம்பந்தர் திருமணத்தில் முக்தி பெற்றவர்.

### 17 உருத்திரபசுபதி நாயனர்

சோழநாடு திருத்தலையூர் அந்தணர்

பகலும் இரவும் குளத்தில் கழுத்தளவு தண்ணீரில் நின்றுஉருத்திரமந்திரத்தினை ஓதி சிவபதம் பெற்றவர்.

### 18 திருநாளைப் போவார் நாயனர்

சோழநாடு-ஆதனூர் புலையர் (நந்தனர்)

திருப்புன்கூர் இறைவனைத் தெரிசிக்க விரும்பிய தால் இறைவன் நந்தியை விலகி இருக்கச் செய்து காட்சி கொடுக்கப் பெற்றவர். சிதம்பரம் நடராஜப் பெரு மானைத் தெரிசிப்பதற்காக நெருப்பிலே மூழ்கி முனிவர் வடிவாய் வந்து சிற்றம்பலவருடன் இரண்டறக்கலந்து மறைந்தவர்

### 19 திருக்குறிப்புத் தொண்ட நாயனர்

தொண்டைநாடு-காஞ்சீபுரம்-ஏகாலியர் (வண்ணர்)

அடியாரிடம் வாக்களித்தபடி துணியைத் துவைத்து உலர்த்திக் கொடுக்க முடியாது மழை பெய்ததால் துவைக்கும் கல்லில் தலையை மோதும் சமயம் இறைவன் திருக்கரத்தால் பிடித்து நிறுத்திக் காட்சி கொடுத்து ஆளப்பெற்றவர்.

### 20 சண்டேசுர நாயனர்

சோழநாடு-திருச்சேய்ஞ்ஞலூர்

பசுவின் பெருமையை உணர்ந்து மேய்க்கும் தொழிலைக் கைக்கொண்டும் சிவபூஜைவிருப்பினராய் பால் அபிஷேகம் செய்தும் வந்தவர் அபிடேக பாற்குடத்தை இடறிய தந்தையின் தாளில் கோலை எடுத்து எறிய அது மழுவாகி வெட்டியது. பரமசிவனுல் தொண்டர்களுக்கெல்லாம் தலைவனுக்கி, அவர் ஏற்றுக்கொண்ட அமுதும் பரிவட்டமும் இவருக்கே கிடைக்கும்படி சண்டேசுரப்பதமும் பெற்றவர்.

### 21 திருநாவுக்கரசு நாயனர்.

திருமுனைப்பாடிநாடு-நடுநாடு திருவாமூர் வேளாளர்

சமணர்களின் போதனையால், ஆருகத சமயமே முத்தியடைய நெறிகாட்டும் என அதில் பிரவேசித்துப் பிறகு தமக்கையாரின் விண்ணப்பத்திஞல் சிவபெருமான் அருள்புரிந்து அடியானுக்கி தேவாரம் பாடச்செய்தும் சமண அரசர்களின் துன்பங்களினின்று விலகி ஐந்தெழுத்தோதி [பஞ்சாக்ஷரம்] கல்லையே தெப்பமாகக் கொண்டு கடலைக்கடந்து கரை ஏறியும், நீற்றறையில் வேகாமலும். நஞ்சையுண்டு இறவாமலும் யானையால்

இடறச்செய்ததில் தப்பியும் உழவாரத்தொண்டு செய்து அரவந்தீண்டிய பாலனைப் பிழைப்பித்தும் திருவீழிமிழலை யில் படிக்காசு பெற்றுத் தொண்டர்கட்கு அமுது செய் வித்தும் தலயாத்திரை செய்து தேவாரப் பதிகங்கள் பாடியும் திருமறைக்கதவு திறப்பித்தும் திருவையாற்றில் கைலைகண்டும் திருப்புகலூரில் முக்தி பெற்றவர்.

## 22 குலச்சிறை நாயனார்

பாண்டிநாடு, மணமேற்குடி மந்திரிபதவி வகித்தவர்

அரசன் சமணத்தைத் தழுவிய போது திருஞான சம்பந்தரை வழிபட்டு நாட்டினையும் அரசனையும் சைவ மாக்கியவர்

## 23 பெருமிழலைக் குறும்ப நாயனார்

மிழலைநாடு-பெருமிழலை

ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளிடம் பேரன்பு பூண்டவர் அவர் அஷ்டமா சித்திகளையும் பெற்றவர். சுந்தர மூர்த்தி சுவாமிகள் கைலைசெல்லும் முன்னாள் தானும் கைலை சென்ற பெரியார்.

## 24 காரைக்காலம்மையார்

சோழநாடு. காரைக்கால். வணிகர்குலம். (புனிதவதியார்)

அடியார்களுக்கு அமுதளித்து வந்தவர் கணவனுக் குப் பயந்து இறைவனிடம் மாங்கனிபெற்றவர். இறை வனால் அம்மையே என்று அழைக்கப்பெற்று திருவாலங் காட்டில் திருநடனம் காணும் பேறு பெற்றவர்.

## 25 அப்பூதி அடிகள் நாயனர்

சோழநாடு திங்களூர் அந்தணர்

திருநாவுக்கரசு நாயனர் அற்புதச் செயல்களைக் கேள்வியுற்று அவரிடம்பேரன்புபூண்டு, செய்யும்தர்மங்களெல்லாம் அவர் பெயராலேயே செய்தவர். தன் மகன் இறந்ததையும்மறைத்துவைத்து அப்பருக்குஉணவளிக்க முன்வந்தவர். இதனை அறிந்து மகனை எழுப்பி உணவு கொண்ட பெருமைக்கு உரிமையாகும் பேறு பெற்றவர்.

## 26 திருநீலநக்க நாயனர்

சோழநாடு சாத்தமங்கை அந்தணர்

சிவ பூஜைசெய்தும் மகேசுவர பூஜைசெய்தும் ஜாதி மதபேத உணர்ச்சி இல்லாது திருஞான சம்பந்தருடன் வந்த திருநீலகண்ட யாழ்ப்பாணருக்கு தன்வீட்டினுள் இருக்க இடம் கொடுத்தவர். திருஞான சம்பந்தர் திருமணத்தில் முக்தி பெற்றவர்.

## 27 நமிநந்தி அடிகள் நாயனர்

சோழநாடு ஏமப்பேரூர் அந்தணர்

எந்த நேரமும் சிவச்சிந்தனை செய்தவர். திருவாரூர் கோயிலில் தண்ணீரால் விளக்கேற்றியவர். திருவாரூர் பிறந்த எல்லோரையும் சிவகணங்களாகக் காணும் பேறு பெற்றவர்.

## 28 திருஞான சம்பந்த மூர்த்தி நாயனர்

சோழநாடு சீர்காழி அந்தணர்

உமாதேவியினுல் ஞானப்பால் உண்ணப் பெற்று மூன்ருவது வயதிலிருந்து தேவாரம் பாடியவர். திருக்கோலக்காவில் பொற்ருளமும், திருவரத்துறையில் முத்துச் சிவிகையும், முத்துக் குடையும் முத்துச் சின்னமும்,

திருவாவடுதுறையிலே யாகத்தின் பொருட்டு பொற்கிழியும், திருவீழிமிழலையில் பொற்காசும் பெற்று, தலயாத்திரைசெய்து, பாம்பு கடித்திறந்த வணிகனை எழுப்பி, வேதாரண்யத்தில் மறையினால் மூடப்பட்ட கதவைத் திறந்து மூடச்செய்தும், சமணரை வாதில் வென்று பாண்டிய மன்னனைச் சைவ சமயத்தில் நிறுத்தி, எலும்பைப் பெண்ணுருவாக்கியும் ஆண் பனையைப் பெண் பனையாக்கியும் இன்னும் பல அற்புதங்களைச் செய்து தன் பதினாருவது வயதில் திருமணத்தில் அடியார்களை முக்தியடையச் செய்து, தானும் ஜோதியில் கலந்து சிவமாம்பேறு பெற்றவர்.

### 29—ஏயர்கோன் கலிக்காம நாயனார்

சோழநாடு' திருப்பெருமங்கலம், வேளாளர்-சேனாதிபதி

திருப்புன்கூரில் ஏராளமான திருப்பணிகள் செய்தவர். சுந்தரமூர்த்தி சுவாமிகள், சிவபெருமானை மனைவியின் பொருட்டு தூதுவிடுத்ததைக் குறித்து வருந்தி சுந்தரரை வெறுத்து அவரைப்பார்க்க மனமின்றி வாளால் குத்திக் கொண்டு உயிர் துறந்தார். சுந்தரரும் செய்தி அறிந்து வாளால் குத்திக் கொள்ள முற்படும் பொழுது, இறைவன் அருளால் [இறந்தகலிக்காமர்] எழுந்து வாளைப்பிடித்துக் கொள்ளச்செய்து நட்பினராயினர்.

### 30 திருமூல நாயனார்

திருக்கைலைத் திருநந்திதேவருடைய சிவயோகிகளுள் ஒருவர்

இவர் சோழநாடு - சாத்தனூர். இடையன் மூலனென்பவன். பசு மேய்க்கின்றபோது இறந்த சரீரத்தினுள்ளே பிரவேசித்து திருமூலராய் எழுந்து திருவாவடுதுறையில் அரசின்கீழ் மூவாயிர வருஷம் சிவயோ

கத்திலிருந்து வருஷத்திற்கு ஒவ்வொரு திருப்பாட்டாக பத்தாம் திருமுறையாகிய திருமந்திரமென்னும் நூலை அருளிச் செய்தார்.

### 31 தண்டியடிகள் நாயனர்

சோழநாடு திருவாரூர்

ஸ்ரீபஞ்சாட்சரத்தை ஜபிக்கும் பிறவிக்குருடர். திருக்குளப் பணிசெய்து, குருடுநீங்கிச் சமணரை வென்றவர்.

### 32 மூர்க்க நாயனர்

தொண்டைநாடு திருவேற்காடு வேளாளர்

சிவனடியார்கட்குத் திருவமுதுசெய்வித்தபின் உண்பவர். நிலம் முதலியவற்றை விற்றும் சூதாடலால் கிடைக்கும் பொருளினுலும் மகேசுர பூஜை செய்து சிவபதமடைந்தார்.

### 33 சோமாசி மாற நாயனர்

சோழநாடு. திரு அம்பர். அந்தணர்

ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஜபிக்கும் நியமம் கொண்டவர், வேதவேள்வி செய்து சுந்தரமூர்த்தி சுவாமிகளை வழிபட்டு சிவபதத்தைப் பெற்ருர்.

### 34 சாக்கிய நாயனர்

சங்கமங்கை–வேளாளர்

தினந்தோறும்–சிவலிங்க வழிபாடு செய்யும் நியமங்கொண்டு பக்கத்தில் ஒரு சிவலிங்கங்கண்டு ஆனந்தம் கொண்டும் அருகில் கிடந்த ஒரு கல்லை எடுத்து லிங்கத்தின்மேல் எறிந்தார் சிவபிரான் இளம்புதல்வர் செயலாக மகிழ்ந்தார்; மறுநாள்வந்து நேற்று நாம் கல்லெ

றிந்தது நமது செயலன்று, திருவருட் செயலே என்றெண்ணி அதுவே தொண்டாகச் செய்துவந்தனர்.

### 35 சிறப்புலி நாயனர்

சோழநாடு திருஆக்கூர்-அந்தணர்

அடியார்கட்கு அமுதும், பொருளும் கொடுத்து ஸ்ரீபஞ்சாக்ஷர செபம். தியானம். சிவபூசை. யாகம், முதலிய வழிபாடுகள் செய்தவர்.

### 36 சிறுத்தொண்டநாயனர்

சோழநாடு. திருச்செங்காட்டங்குடி பிராமணர்

சிவத் தியானபூஜாதிகள் செய்து சிவனடியார்கட்கு அமுது செய்வித்து பின் தாம் உண்பார். அரசன் பொருட்டு வாதாவிப்போர் வென்றவர். இவரது அன்பு உறுதியை விளக்க– சிவபிரான் வயிரவ வேடத்துடன் வந்து, ஆறுமாதத்திற் கொருதரம் உண்பது [நரபசு] ஐந்து வயது அவயவப்பழுதின்றி குடிக்கு ஒரே பிள்ளை. மகிழ்ந்து தாய் பிடிக்க தந்தை அரிந்து சமைத்த கரியோடு தான் உண்போம் என்ருர். சரி என்று பத்தினியாரிடம் தெரிவித்து, இப்படி ஒரு பிள்ளை அகப்படாது, நமது பிள்ளை சீராளன் பள்ளிக்குப் போனவனை அழைப்போமென அழைத்து வந்து, அடியார் சொன்னபடி பாகம் செய்து படைப்பிக்க, வயிரவர், நம்முடன் உண்ண புத்திரனை அழையுமென்ன நாயனர் மனைவியாருடன் வெளிவந்து வருந்தி அழைக்க திருவருளால் அவ்வரும் புதல்வர் ஓடிவர அடியவர் திருவமுது செய்யும் பாக்கியம் பெற்ருேமென்று மகிழ்ந்து உள்ளே சென்று பார்க்க வயிரவரையும் அமுதையும் காணுது திகைத்து அச்சமுற சிவபிரான் இடபாரூடராய்த்தோன்றி அருளப்பெற்றவர்

## 37 கழறிற்றறிவார் நாயனர்

மலையாளநாடு கொடுங்கோளூர் அரசர்

திருவஞ்சைக்களத்திலே.சிவாலயத்திருத்தொண்டு செய்யும் நியம சீலர். திருவருளால் சேர மகா ராஜாவாக திருமுடி சூடப்பெற்று யானை மீது வலம் வரும்போது, ஒரு வண்ணன் உடம்பில் உவர்மண் வெண்ணிறமாகத் தோன்றச் சிவவேடம் என நினைந்து வணங்கினவர். மதுரேசரினல் பாணபத்திரருக்கு பொருள் கொடுக்கும்படி "மதிமலிபுரிசை" என்னும் திரு முகப் பாசுரம் பெற்றவர். சிதம்பரேச சிவபூஜா நியமத் திருத்தொண்டு புரிந்து வந்த பேரன்புக்கு பூஜை முடி வில் சிற்சபேசர் திருச்சிலம்போசை செய்து வந்தனர். ஒரு நாள் சுந்தமூர்த்தி நாயனர் பதிகம் பாடுதலைக் கேட்டு இதனல் சிலம்பொலி செய்யத்தாழ்த்தமை யறிந்து, திருவாரூர் சென்று சுந்தரரைத் தோழமை பெற்ருர். சுந்தரர் வெள்ளையானையின் மேல் ஏறி சேர மான் பெருமாளை நினைத்துக் கொண்டு கைலாசம் சென் ருர். சேரமானும் ஒரு குதிரையின் செவியில் ஸ்ரீபஞ்சாக்ஷ ரத்தை ஓதி ஏறி சுந்தரருக்கு முன்னுகச் சென்ருர், ஞான உலாபாடி சிவகண நாதராயினர்.

## 38 கணநாத நாயனர்

சோழநாடு சீர்காழி அந்தணர்

தோணியப்பருக்கு திருத்தொண்டு தாமே செய்தலு மன்றி, திருநந்தனவனம், மலர்கொய்து மாலை தொடுத் தல் திருவலகு, திருமெழுக்கு, திருவிளக்கிடுதல், திரு முறைகள் எழுதல், பூஜித்தல், வாசித்தல் முதலிய தொண்டு செய்வதற்கு கருவிகள் கொடுத்து, உண வளித்து, ஞானசம்பந்தரை வழிபட்டவர்.

### 39—கூற்றுவ நாயனர்

கிளந்தை [சிற்றரசர்]

சிவனடியார் பூசனை சிறப்பாகச் செய்தவர். தில்லை வாழந்தணர் தமக்கு முடிசூட்ட மறுக்கவே, தில்லையம் பலவர் திருவடிகளையே முடியாகச் சூடப்பெற்றவர்.

### 40 பொய்யடிமை யில்லாத புலவர்

மதுரையில் சங்கப்பலகையிலிருந்து கொண்டு தமிழ் மொழியை வளர்த்த கடைச்சங்கப் புலவர்கள். கபிலர், பரணர், நக்கீரர் முதலாக நாற்பத் தொன்பதின்மர்.

### 41 புகழ்ச்சோழ நாயனர்

சோழநாடு - கருவூர் அரசர்

சிவனடியார் குறிப்பறிந்து ஏவல் செய்து வழிபடும் சீலமிக்கவர்.அதிகன் என்னும் சிற்றரசன் வரி கொடாத தால் வீரர்களைப் போருக்கு அனுப்பி கொன்றவர்களின் தலைகளை கொண்டுவந்ததில், சடைமுடியும் திருநீறும் தரித்திருந்த தலையைக் கண்டு சிவனடியார் ஒருவர் இறந்ததை அறிந்து, மனம் கலங்கி நெருப்பு வளர்த்து அதில் புகுந்து பேரின்பம் பெற்றவர்.

### 42 நரசிங்க முனையரைய நாயனர்

நடுநாடு சிற்றரசர்

திருவாதிரை நாளில் விசேஷ பூஜை செய்தும் சிவனடியார்க் கமுதளித்தும் நூறு பொன்னும் கொடுத் தவர். ஒரு நாள் விபூதி அணிந்து வந்த போலி அடி யாரை உபசரித்து இருநூறு பொன் கொடுத்து வணங்கி இறைவன் திருவடி நீழலடையப் பெற்ருர்.

### 43 அதிபத்த நாயனர்

சோழநாடு-நாகபட்டினம் (பரதவர்) மீன்பிடிப்பவர்

மீன் பிடியலில் வரும் முதல் மீனை சிவபிரானுக்கென்று விட்டுவிடுவார். அநேக நாள் ஒவ்வொரு மீனே அகப்பட அதனையும் விட்டதால் உணவின்றி வருந்தும் போதும் ஒருநாள் சுவர்ணரத்ன மயமான ஒரோ மீன் அகப்பட்டதையும் சிவார்ப்பணம் செய்து இன்பலோகம் அடைந்தவர்,

### 44 கலிக்கம்பநாயனர்

(நடுநாடு-பெண்ணுகடம்)

திருத்தூங்கானைமாடக் கோவிலில் வழிபாடு செய்து அடியார்கட்கு மகேஸ்வர பூசனை செய்து வருவார். முன்பு தம் பணிவிடைக் காரராயிருந்தவர் சிவவேடம் தாங்கிவந்ததை மனைவியார் சிந்தித்து கரகநீர் வார்க்க சிறிது தாமதித்ததற்கு மனைவி கையை வெட்டி பன்னுள் தொண்டு செய்து சிவபதம் அடைந்தார்.

### 45 கலிய நாயனர்

தொண்டை நாடு–திருவெற்றியூர் செக்கார் பெருஞ்செல்வர்

திருக்கோயிலெங்கும் திருவிளக்கு ஏற்றுவார். வறுமையுற்று, செக்காட்டி கூலிவாங்கி திருவிளக்கேற்றினர். அதுவும் கிடைத்திலது. தமது மனைவியை விற்கச் சென்று வாங்குவாரின்றி வருந்திவந்து அகல்களைப் பரப்பி கண்டத்தில் கத்தி வைத்து அறுத்து உதிரம் பெருகி அகல்நிரம்புமாறு செய்யும் சமயம் சிவபிரான் அவர்கையைப் பிடித்து அதனைமாற்றி கைலையில் என்றும் நீங்காதிருக்க அருள்புரியப் பெற்றவர்.

## 46 சத்தி நாயனர்

சோழநாடு - வரிஞ்சியூர். வேளாளர்

இவர் அடியாரே ஆண்டானைக் காட்டிவைக்கும் காரணர்என அறிந்து சிவனடியார் நிந்தனை சிவநிந்தனை முதலிய சிவ அபசாரர்களாகிய அதிபாதகர்களுடைய நாக்கை தண்டாயுதமாகிய குறட்டினுல் பற்றி இழுத்து, கத்தியால் அறுத்து அஞ்சாத இவ்வருந்தொண்டினைப் பன்னுட்செய்து சிவலோகத்தில் இன்பவாழ்வு உடையராயினர்.

## 47 ஐயடிகள் காடவர் கோன்நாயனர்

தொண்டைநாடு-காஞ்சீபுரம் பல்லவர்-சிற்றரசர்

சிறந்த சிவத்தொண்டு புரிந்தவர். அரசாட்சி துன் பத்திற்கே காரணமாகு மென்றெண்ணி பதவியை வெறுத்து தலயாத்திரை செய்து க்ஷேத்ர திருவெண்பா பாடி திருவடி அடைந்து இன்புற்ருர்.

## 48 கணம்புல்ல நாயனர்

வடவெள்ளாற்றுக்குத் தென்கரை இருக்குவேளூர்.
பெருஞ்செல்வர் காராளர்)

செல்வத் தாலடையும் பயன் இதுவே என்று சிவாலயத்தில் திருவிளக்கேற்றி தோத்திரம் செய்வார் வறுமை எய்தி வீட்டிலுள்ள பொருள்களை விற்று சிதம் பரம் இளமை யாக்கினுர் கோயிலில் திருவிளக்கிட்டு பொருள்கள் ஒழிந்தபின். கணம்புல் அறிந்து விற்றும் நெய்விளக்கேற்றினுர். ஒருநாள் அதுவும் விலையாகாமல் அதனையே எரித்தார் அது நீண்டநேரம் எரியாமையால் தமது சிகையைக்கொண்டு எரித்ததும் இறைவன் காட்சி தந்து அருளப் பெற்றவர்.

## 49 காரி நாயனுர்

சோழநாடு-திருக்கடவூர் வேதியர்

காரிக்கோவை என்னும் பிரபந்தத்தைப்பாடி சேர சோழ பாண்டியர்களிடம் மகிழும்படி அரும்பொருள் விளங்கச்சொல்லி பெற்ற திரவியங்கள் யாவும் சிவனடியார்கட்கு கொடுத்தும் திருப்பணிகள் செய்தும் முக்தி பெற்றவர்.

## 50 நின்றசீர் நெடுமாற நாயனுர்

பாண்டிநாடு-மதுரை அரசர்

மங்கையற்கரசியாரின் கணவர் திருஞானசம்பந்தர் அருள்பெற்று சமண் சார்பு நீங்கி விபூதி சாத்தப்பட்டு சுரம் நீங்கி அவர் அருளிய மெய் உபதேசத்தைப்பெற்று கூன் நிமிர்ந்து சைவம் வளர்த்தவர்.

## 51 வாயிலார் நாயனுர்

தொண்டைநாடு-மயிலாப்பூர் வேளாளர்

இவர் சிவபூசை சிறந்த தென்பது தெளிந்து தமது மனமாகிய கோயிலிலே ஞானமாகிய தீபமிட்டு, ஆன்மாவே லிங்கமர்க அதனில் சிவபரம்பொருளை ஆவாகித்து, ஆனந்தமாகிய மஞ்சனமாட்டி, க்ஷமையாதி அஷ்டபுஷ்பம் சாத்தி ஆணவமல சமர்ப்பணமாகிய தூபமும் ஞான விளக்கமாகிய தீபமும் காட்டி அன்பாகிய திருவமுதை நிவேதித்தலாகிய ஞான பூஜையே செய்து சிவபதம் அடையப் பெற்றவர்.

## 52 முனையடுவார் நாயனார்

சோழநாடு-திருநீடூர்-வேளாளர்

பகைவர்களை வெல்லமுடியாதவர் தம்மை வேண்டுங் கால் அதற்கு கூலி பேசி நடுநிலையில் வைத்து யுத்தம் புரிந்து எப்பகைவரையும் அருள்வலியால் வென்று வாங்கிய பொருள்களை மகேஸ்வர பூஜை முறைப்படி செய்து முத்தி பெற்றவர்.

## 53 கழற்சிங்க நாயனார்

காடவர்-சிற்றரசர். சிவனடிமறவாச் சிந்தையர்

திருவாரூர் திருக்கோயிலிலே சுவாமியை வணங்கி வலம்வரும்போது மாதேவியார் திருமாலை கட்டும் மண் டபத்தின் பக்கத்திலே கிடந்த ஒரு புதுப்பூவை மோந் தது கண்டு செருத்துணை நாயனார் ஓடி வந்து அவள் மூக்கை அரிந்தார். தேவி அலறிய சப்தங்கேட்டு நீதி தவறாத கழற்சிங்கர் விரைந்து வந்து நடந்ததை அறிந்து முகர்ந்த மூக்கை விட எடுத்த கையை அல்லவா துணிக்கவேண்டும் என்று தேவி கையைத் துணித்தார். தேவர்கள் புஷ்பமாரி பொழிய நித்யானந்தப் பெரு வாழ்வு பெற்றார்.

## 54 இடங்கழி நாயனார்

கோனாடு-கொடும்பாளூர் சிற்றரசர்

கனகசபையின் முகட்டை கொங்கிற் செம்பொன் னால் வேய்ந்த. சூரியகுலத்தவர் ஒரு மெய்யன்பர் செய்து வரும், மகேஸ்வர பூஜைக்கு பொருளில்லாத ஒரு சமயத் தில் இவ்வரசரின் நெல்களஞ்சியத்தில் நடு ராத்திரியில் சென்று அள்ளினார். காவலர்கள் பிடித்து அரசன்முன்

விட்டனர். வேடங்கண்டு பரிந்து மகிழ்ந்து நெற் பண்டாரம் மட்டும் இன்றி நிதிப்பண்டாரத்தையும் திறந்து சிவனடியார்கள் கொள்ளையாக அள்ளிக் கொண்டு செல்லலாம் என்று பறைசாற்றுவித்து பண்டாரம் முழுதும் திறந்துவிட்ட பெரும் புண்ணிய சீலர்.

## 55 செருத்துணை நாயனர்

சோழநாடு, தஞ்சாவூர், வேளாளர்

இவர் திருவாரூர் வன்மீக நாதரை வணங்கி திருத் தொண்டுகள் செய்து கழற்சிங்க நாயனர் மனைவியாகிய பட்டத்தரசி சிவபூஜைக்குரிய பூவை மோந்ததற்கு அவள் மூக்கை அரிந்து புகழ்பெற்றவர்.

## 56 புகழ்த்துணை நாயனர்

செருவிலிபுத்தூர், ஆதிசைவர்

இவர் சிவாகம விதிப்படி தினமும் ஆன்மார்த்த பூஜை முடித்தே, திருக்கோயில்களில் சென்று பரார்த்த பூசனைகள் செய்து வருகின்றவர். ஒருக்கால் பஞ்ச மிகுதி யால் உணவின்றி மெலிந்து வருந்தி, கோயிலில் அபிஷேகிக்கும்போது தன்பசியால் மயக்குற்று திருமஞ் சனக் குடம் தவறிவிழுந்திட அவரும் விழுந்து அயர்ந்து கிடந்தனர். சுவாமி அவர் கனவில் பஞ்சம் நீங்கும்வரை பொற்காசு தருவோம் என்றருள, விழித்தெழுந்து திருப் படியில் பொற்காசு கண்டெடுத்து பசிநீங்கி நியமந் தவருது சிவபூசையும், சிவனடியார்க் கமுதளித்தலும் செய்துவந்த சிவவர்க்கச் செல்வர்

### 57 கோட்புலி நாயனுர்

சோழநாடு, திருநாட்டியத்தான்குடி வேளாளர் - சேனுதிபதி

சிவாலயபூசனைக்கு அமுதுபடி முதலிய கொடுக்கும் சிவபுண்ணியமே செய்தார். அரசன் ஏவலில் போர் முனைக்குச் செல்லும்போது, தாம் வரும்வரை கோயிலுக்கு வேண்டிய நெல்லை நிறைத்து வைத்து சுற்றத்தாரனைவரையும்பாதுகாத்து வரச்சொல்லியதைபஞ்சத்தால் எடுத்த சுற்றத்தாரனைவரையும், இந்நெல்லை யுண்டவளின் பாலை யுண்ட சிசுவையும் துணித்து, அவனருள் வசத்தால் அக்கோலத்தோடு சிவலோகத்திற்கு அழைக்கப்பெற்ற பெரும் சிறப்புடையவர்.

### 58 பத்தராய்ப் பணிவார்கள்

தொகையடியார் ஒன்பதின்மரில் ஒருவகையார்

சிவனடியார்களை உபசரித்தல், சிவபூசனைகண்டு மகிழ்தல், சிவபூசனையும் மகேஸ்வர பூசையும் செய்தல், சிவசரித்திரங்கேட்டல், இடையருது சிவபிரானைத் தியானித்தல், முதலான எட்டுவித உத்தமச்செயலுடையவர்கள்.

### 59 பரமனையே பாடுவார்

பதியாகிய பரமசிவனையே மெய்யன்போடு வடமொழியாலும் தென்மொழியாலும் பாடுகின்றவர்கள்.

### 60 சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்கள்

அநித்திய மாகிய உலகப்பற்று முற்றும் அற்று பரசிவனையே பற்றி நின்று ஆருதாரங்கண்டு மூலாதாரக் கணேசருள்பெற்றுசிவத்துடன் உற்று வாழும் நிலை நழுவாது பாவித்து நிற்கும் பாக்கியவான்கள்.

### 61 திருவாரூர்ப் பிறந்தார்கள்

ஆரூரிற்பிறந்த எவ்வருணத்தாரும் சிவகணத்தவர்களே. இவர்கள் திருக்கைலைச்சிவகணத்தவர் என்பதைத் தியாகேசர் அருளால் நமிநந்தியடிகள் நேரே கண்டமையாலும் தெளியலாம்.

### 62 முப்போதும் திருமேனி தீண்டுவார்

ஆதி சைவர்களுள்ளே ஆசாரியாபிஷேகங்களையும் சமயவிசேட நிர்வாண தீக்ஷைகளையும் பெற்றவர்களே உத்தமோத்தம, சிவாச்சாரியர்கள். இவர்கள். சிவ தீக்ஷாதிகள் செய்து உய்விக்கும் குருமார்களாய் விளங்குவதால் குருக்கள் எனப்பெற்றனர். இவர் ஆன்மார்த்த பூஜாதிகள் முடித்து பரார்த்த சிவலிங்காதி திருமேனி முப்போதும் தீண்டிப் பூஜித்து வருகின்றவர்கள்.

### 63 முழுநீறு பூசிய முனிவர்கள்

விபூதியை மெய்யன்புடன் சிவசிந்தனையோடு சிந்தாமல், சிரசு, நெற்றி முதலிய அங்கங்களில் பரவப் பூசுகின்றவர்கள்.

### 64 அப்பாலும் அடிச்சார்ந்தார்கள்

தமிழ்நாட்டுக்கு அப்பாலும், திருத்தொண்டத் தொகையிலே சொல்லப்பட்டவர்கள் காலத்துக்கு முன்னும் பின்னும், சிவபெருமான் திருவடிகளை அடைந்தவர்கள்.

## 65 பூசலார் நாயனர்

தொண்டை நாடு திருநின்றவூர் அந்தணர்

சிவாலயம் செய்யப்பொருளின்மையால் மனோபாவனை யினலே ஆலயங்கட்டிக்கும்பாபிஷேகம் செய்ய சுபதினம் குறிப்பிட்டிருக்கும்போது, காஞ்சி காடவராஜா நெடுங் காலமாகச் செய்துவந்த கோயிற் கும்பாபிஷேகம் செய்ய அதே தினத்தில் நிச்சயித்தனர். சிவபிரான் அரசர் கன வில் தோன்றி பூசலார் செய்த கோயிலுக்குப்போகிறேம், நீ அடுத்த தினம் செய்க என்றருளினர். அரசர் விசாரித்து பூசலாரை வணங்கிக் கேட்க, சிவபிரான் அடியேனையும் ஒரு பொருளாகக் கொண்டு உமக்குத் தெரிவித்துள்ளது புறக்கோயிலன்று, மனக் கோயிலே என்று குறித்தபடி சிவபிரதிஷ்டை செய்து நெடுங் காலம் பூஜித்து வந்தார்.

## 66 மங்கையர்க்கரசியார்

(சோழராஜன் மகள்)

மதுரைப் பாண்டிமா தேவியார், சைவந்தழைத் தோங்க மந்திரி குலச்சிறையாருடன், திருஞானசம்பந் தரால் புகழ்ந்து பாடப் பெற்றவர், அவரருளால் தமது நாயகர் கூன்பாண்டியன் முன் வினை வசத்தால் சார்ந்த சமணிருள் முழுதும் நீக்கி நாடெங்கும் திருநீற்று நெறியே பரப்பி சைவசமயத்தைப் பாதுகாத்து வந்த அருட்கோமகளாவர்.

### 67 நேசநாயனுர்

காம்பீலிநகரம்-சாலியர்

இவர் சிவனடியே சிந்தித்து, திருவைந்தெழுத்தைச் ஜெபித்து மலர்கொண்டு அருச்சித்து சிவனடியார்கட்கு வஸ்திரம், கோவணம், லங்கோடு நெய்து இடையருது கொடுத்துதவிய பெரும் புண்ணிய சீலர்.

### 68 கோச்செங்கட் சோழநாயனுர்

(சோழநாடு-அரசர்)

இவர் முற்பிறப்பில் சிலந்தியாகப் பிறந்து திருவானைக்காவில் சிவலிங்கத்தின் மேல் தன் வாய் நூலால் மேற்கட்டி செய்ததை, ஒரு யானை அதனை நீக்கி பூஜிக்க சிலந்தி துதிக்கைத் துளைவழியாகச் சென்று கடித்து யானை இறக்க துதிக்கை தரையில் மோதியதால் சிலந்தியும் இறந்தது. சுபதேவ சோழனுக்கும் கமலவதிக்கும் பிள்ளையாகப் பிறந்து முன்பு அருள் பெற்ற திருவானைக்காவல் திருக்கோயிலின் கருப்பக்கிரகத்தில் யானை புகாதபடி செய்து, மந்திரிகளை ஏவி சுமார் எழுபது சிவாலயங்கள் அதுபோல் யானை புகாதபடி செய்வித்து, மேலும் பற்பல தொண்டுகள் செய்து இன்பமுற்றவர்.

### 69 திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனுர்

(நடுநாடு-திருவெருக்கத்தம்புலியூர்-பாணர்)

மதுரையில் சுந்தரேசர் திருவருளால் பொற்பலகை பெற்று அதன்மீதிருந்து யாழ்வாசித்து, திருவாரூர் வன்மீக நாதர் வகுத்த வடதிசை வாயிலில் வந்து வாசித்து,

சீர்காழியில்-சம்பந்தர் பாடும் திருப்பதிகங்களை யாழி லிட்டுப் பாடி நல்லூர்ப் பெருமணத்தில் அவர் அருளால் சிவபதம் சேர்ந்தவர்.

### 70 சடைய நாயனார்

(நடுநாடு-திருநாவலூர் ஆதிசைவர்)

தம்பிரான் தோழராகிய சிவசொரூப சுந்தரமூர்த்தி நாயனாரைப் புதல்வராகப் பெற்று ஆன்மார்த்த, பரார்த்த சிவபூசனை இடையறுது செய்து பெரும் பேறடைந்தவர்.

### 71 இசைஞானியார்

மேற்கூறிய சடையநாயனாருடைய தர்மபத்தினியார் திருவருளினாலே, சிவசொரூப சுந்தரமூர்த்தி நாயனார் குழந்தையாக வந்தருளப்பெற்ற பெரும் பாக்கியம் பெற்றவர்.

### 72 சுந்தரமூர்த்தி நாயனார்

திருமுனைப்பாடி நாடு திருநாவலூர் ஆதிசைவர்

திருக்கைலாயத்தில் சிவபெருமானின் அடியார் அணுக்கத் தொண்டர் ஆலால சுந்தரரும், பார்வதி தேவியின் சேடியர்களான. அநிந்திதை, கமலினியும். நந்தன;வனத்தில் ஒருவர் மேல் ஒருவர் இச்சை கொண் டார்கள். சிவபெருமான் அதனையறிந்து, பூலோகத்தில் பிறந்து இன்பம் அனுபவிக்குமாறு அவர்கட்குக் கட்டளை யிட சுந்தரர் மனங்கலங்கி பிரபஞ்ச வாழ்க்கையில் மயங் கும்போது தடுத்தாட்கொள்ள வேண்டினார். இறைவ

னும் இசைந்தருளினர். பூமியில் சடையனருக்கும் இசை ஞானியாருக்கும், புத்திரராக அவதரித்து நம்பி ஆரூரர் என்ற பெயருடன் விளங்கினர். அழகுற வளர்ந்த சிறுவனை அவ்வூர் அரசனகிய நரசிங்க முனையரையர் தமக்கு அபிமான புத்திரராகப் பெற்று, அரசர்க்குரிய வித்தையையும் அந்தணர்க்குரிய கல்வியையும் கற்பிக்கும்படி செய்வித்து, மணப்பருவம் அடைந்ததும், சடங்கவி சிவாச்சாரியர் மகளை விவாகம் செய்ய மணப்பந்தருக்குச் சுந்தரர் சென்றதும் சிவபெருமான் வாக்களித்தபடி ஒரு வயோதிகப் பிராமணராக வந்து நீ என் அடிமை அனுமதி இன்றி மணம் செய்யக் கூடாதென்று தடுத்து, நீதி விசாரணைக்கு ஒப்பந்தச் சீட்டுடன் திருவெண்ணை நல்லூருக்கு கூட்டிவந்து வழக்குரைத்து வெற்றி பெற்று, தன்னுடன் கூட்டிப்போய்திருவருட்டுறைச் சிவாலயத்தினுள் சென்று மறைந்து விட்டார். சுந்தரர் திகைத்து அவரைக்கூப்பிடச் சிவபெருமான் காட்சிகொடுத்து, நம்மேல் சொற்றமிழ் பாடெனப்பணித்து, பித்தா என அடிஎடுத்துக்கொடுக்கத் தொடர்ந்துதேவாரம் பாடினர். திருவதிகையில் திருவடி தீக்ஷை பெற்ருர். திருவாரூருக்கு வந்தசமயம், அங்கு உருத்திர கணிகையர் குலத்தில் பிறந்திருக்கும், உமாதேவியின்சேடி கமலினியாகிய பரவையாரை, சிவபெருமானே அடியார்களுக்குத் தெரிவித்து, சுந்தரருக்குத் திருமணம் செய்வித்தருளினர். சிவபிரான் அடியார் மகிமைகளை விரித்துக்கூறி (தில்லை வாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்) என்றருளியதை முதலடியாகக் கொண்டு திருத்தொண்டத்தொகை பாடினர். குண்டையூரில் பரவையார் பொருட்டுப் பெற்ற நெல்லை, திருக்கோளிலிப் பெருமானைப்பாட, பூதங்கள் திருவாரூர் முழுவதிலும் நெல் மலையாகக் குவித்தது. திருநாட்டியத்தான்குடி கோட்புலி நாயனர் மக்கள், சிங்

கடி, வனப்பகை ஆகிய இருவரையும் அடிமைப்பெண்களாக ஏற்றருளுமாறுபிரார்த்திக்க. மறுத்து மக்களாகஏற்றுக்கொண்டார். திருப்புகலூரில் பொன்பெற எண்ணிப் பாடி, துயிலும்போது, தலையணையாகச் செங்கல் கற்களை வைத்திருந்தமையால் அவைகள் தங்கமானது கண்டு (தம்மையே புகழ்ந்து) என்னும் பதிகம் பாடினர். திருப்பாச்சிலாச்சிராமத்தில் பொற்குவை பெற்றார். திருமுதுகுன்றம் (விருத்தாசலம்) வந்து பாடி பன்னீராயிரம் பொன் பெற்றதை மணிமுத்தா நதியில் இட்டு திருவாரூர் குளத்தில் எடுத்தருளினர். திருக்குருகாவூர் செல்லும்போது. சிவபிரான் தண்ணீர்ப் பந்தர் அமைத்து கட்டமுது அளித்தனர். திருக்கச்சூர் ஆலயக்கோயிலில் வணங்கிப் புறத்து வந்தபோது சிவபிரான் பிராமணராய்ப் பிக்ஷை எடுத்து வந்து உண்பித்து மறைந்தார்.

திருவொற்றியூரில் வேளாளர் குலத்தில் (அநிந்திதையாகிய) சங்கிலியாரை மகிழ மரத்தின் கீழ், உன்னை நான் பிரியேன் என்று சபதம் செய்து சிவபெருமான் அடியார் மூலமாகத் திருக்கல்யாணம் செய்விக்க. வசித்தருளிய சுந்தரர், திருவாரூர் தெரிசிக்க விரும்பி திருவொற்றியூரை நீங்கினர். சபதம் தவறினமையால் அவரது இருகண்கள் பார்வை மறைந்தன. திருவெண்பாக்கத்தில் ஊன்றுகோல்பெற்று, காஞ்சியில் இடக்கண் பார்வை பெற்றுப் பதிகம்பாடி, திருவாரூருக்கு வந்து மீளாவடிமை என்று பாடி வலக்கண் பார்வையும் பெற்றுமகிழ்ந்தனர்.

பரவையார் ஊடி நிற்பது தெரிந்த சுந்தரர், தியாகராஜப்பெருமானை வேண்டித் தூதனுப்பி ஊடல் நீங்கி கூடி இருந்தார்.

தூதனுப்பியதை அறிந்த ஏயர்கோன் கலிக்காம நாயனுர் சுந்தரர்மேல் கோபங்கொண்டமையால் சூலே, நோயினுல் வருந்தி நோய் தீர்ந்து இருவரும் நண்பரா யினர். சேரநாட்டரசர் சேரமான் பெருமாள் நாயனுர் சுந்தரருடைய பக்தி மகிமையைத் தில்லேக் கூத்தரால் அறிந்து, திருவாரூர் வந்து இருவரும் நண்பராயினர். சுந்தரருக்குச் சேரமான்தோழர் எனப்பெயர்வழங்கியது.

இருவரும் பல தலங்களே வழிபட்டுத் திருவையாறு தரிசிக்க விரும்பி வரும்போது, காவிரி நதி பெருகு தலேக்கண்டு (பரவும் பரிசொன்றறியேன் நான்) என்று பதிகம்பாட, நதி விலகி வழிவிட்டது. அவிநாசி யில் முதலேயுண்டபாலனேப்பதிகம்பாடி உயிர்பெறச்செய் தனர். இன்னும்பல அற்புதங்களேச் செய்து கொண்டு திருவஞ்சைக்கள க்ஷேத்திரத்தை வந்தடைந்தார். சுவாமி தரிசனம் செய்து தேவரீருடைய திருவடிகளிலே சேர்த்தருளவேண்டும் என்றுபிரார்த்திக்கதிருக்கைலேயி லிருந்து வெள்ளேயானே (அயிராவணம் 2000 கொம்பு களேயுடையது) யுடன் தேவர்கள் வந்து சுந்தரரை யானே யின் மேல் ஏற்றி அழைத்துச் சென்றனர். செல்லும் போது சேரமானேத் திருவுளத்திலே நினேத்தார். சேர மான் பெருமாள் சுந்தரர் கைலே செல்கின்றதை அறிந்து அருகில் நின்ற ஒரு குதிரையின் காதில் பஞ்சாக்ஷரத்தை ஓதியருளினுர்.அக்குதிரை ஆகாயத்திலே பாய்ந்து சுந்த ரருக்கு முன் சென்று வெள்ளேயானேயை வலஞ்செய்து அதற்கு முன்னுகச் செல்ல, சுந்தரர் திருக்கைலாயம் அடைந்து சிவபெருமானே வணங்கி திருவருளே மேற் கொண்டு முன்னே தாம் செய்த திருத்தொண்டைச் செய்வாராயினுர். பரவையாரும், சங்கிலியாரும், கமலினி அநிந்திதையாகி உமாதேவியாருக்கு முன்செய்த திருத் தொண்டைச் செய்து வந்தார்கள்.

# சேக்கிழார்

## திருத்தொண்டத் தொகையடியார்

தொண்டைநாடு குன்றத்தூர் வேளாளர் சேக்கிழார் மரபு
அநபாய சோழ மகாராஜாவின் முதன் மந்திரி
பிள்ளைத்திருநாமம் அருள்மொழித்தேவர்

தில்லைவா ழந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாம் திருத்தொண்டத் தொகையடியார் பதம் போற்றி
ஒல்லைஅவர் புராணகதை உலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழா ரடி போற்றி

—உமாபதி சிவம்

அரசன் சமண நூலை மெய்யெனக்கருதி வந்ததை தவறென அறிவித்து இம்மை, மறுமை, வீடு, எனும் மூன்றும் தரும். சிவசரித்திரத்தைக் கேட்க வேணு மென்று சொல்ல. அரசனும் அது யாதெனக் கேட்க. சேக்கிழார் திருத்தொண்டத் தொகையையும் திருவந்தா தியையும், ஓதி அதன் பொருளையும் விரித்துரைத்தார். அரசன் திருத்தொண்டர்களுடைய அடிமைத்திறத்தை யும் அவர்களுக்கு அருளிய பரமசிவனது திருவருள் திறத்தையும் நினைத்து உருகி எல்லோருக்கும் விளங் கும் பொருட்டு இலக்கண விதிப்படி அமைந்த பெருங் காப்பியமாகச் செய்து தரும்படி கேட்டார்.

சேக்கிழார் சிதம்பரம் சிற்சபை முன் சென்று வணங்கி திருத்தொண்டர் சரித்திரத்தைப்பாடச் செய்

வித்தருள வேண்டு மென்று பிரார்த்தித்தார். "உலகெலாம்" என்ருெரு அசரீரி ஓசை யெழுந்தது. ஆயிரக்கால் மண்டபத்தில்இருந்து"உலகெலாம்"என்ற மந்திர வாசக முதலாகக்கொண்டு திருத்தொண்டர் புராணமென்ற (பெரியபுராணம்) பாடினர். அரசன் சிவனடியார்களுடன் சித்திரைத் திருவாதிரையில் சிதம்பரம் வந்து திருத்தொண்டர் புராணத்தைக் கேட்பாராயினர் அடுத்த சித்திரைத் திருவாதிரையில் பொருள் சொல்லி பூர்த்தி பெற்றதும் திருத்தொண்டர் புராணத்தை ரத்ன பீடத்துடனும் சேக்கிழார் பெருமானையும் யானை மீது எழுந்தருளச் செய்து அரசன் சாமரங்கள் பிடித்து வீசிக் கொண்டிருக்க திருவீதி வலம் வந்து கனகசபையில் நடராஜப்பெருமான் திருமுன்னே வைத்தார்கள்.

அரசன் சேக்கிழாருக்கு தொண்டர் சீர் பரவுவார் என்னும் திருநாமம் கொடுத்து ஞான முடிசூட்டிப்பணிந்தார். பின்பு அதனைச் செப்பேட்டில் எழுதி நம்பியாண்டார் நம்பிகளால் வகுக்கப்பெற்ற பதினேரு திருமுறைகளுடன் பன்னிரண்டாந் திருமுறையாகச் சபாநாதர் திருமுன் சேர்த்து வைத்தனர்.

### நாயன்மார் தோத்திரம்

தத்துமூதெயில் மூன்றும் தழலெழ
முத்துமூறல் முகிழ்த்த நிராமய
சித்துமூர்த்தி தன் தாளிணை சேர் அறு
பத்துமூவர் பதமலர் போற்றுவாம்.

### 1 பொய்கையாழ்வார்

தொண்டை நாடு—காஞ்சிபுரம் பகுதி—திருவெஃகா என்ற ஊர்—பொற்றாமரையில் திருச்சங்கின் அம்சமாக ஐப்பசித் திருவோணத்தில் அவதரித்தார்.

### 2 பூதத்தாழ்வார்

தொண்டை நாடு-மாமல்லன் தோற்றுவித்த மகா பலிபுரம், குருக்கத்தி மலரில் கதாயுதத்தின் அம்சமாக ஐப்பசி அவிட்டத்தில் அவதரித்தவர்.

### 3 பேயாழ்வார்

தொண்டை நாடு – மயிலாப்பூர் – ஆதிகேசவ பெருமாள் கோவில் கிணற்றில் செவ்வல்லி மலரில் வாள்ப்படையின் அம்சமாக ஐப்பசி சதயத்தில் அவதரித்தவர்.

திருக்கோவலூர் – மிருகண்டு முனிவர் குடிலில் பொய்கையார் இரவு தங்கினார். அங்கு ஒருவர் படுக்கக் கூடிய இடம் தான் இருந்தது. பிறகு பூதத்தாழ்வார் வந்தார். இருவராக இருக்கலாம் என இணங்கி இருக்கும் போது பேயாழ்வார் வந்தார். அவருக்கும் இடம் கொடுத்து மூவர் நிற்கலாம் என நல்ல மழை பெய்த நள்ளிரவில் நின்றபோது, மேலும் நெருக்கம் உண்டாகியது. காரணம் அறியும் எண்ணத்துடன் ஞானப் பார்வையினால் பேயாழ்வார் அங்கு திருமால் கூட இருப்பதை அறிந்து கூற மூவரும் திருவந்தாதி பாடினார்கள். இவர்கள் மூவரும் முதலாழ்வார் எனப் பெயர் பெற்றவர்கள்.

## 4 திருமழிசையாழ்வார்

தொண்டை நாடு – காஞ்சிபுரத்தின் கீழ்ப்பகுதியில் திருமழிசை என்ற ஊர்-பார்க்கவ முனிவர் கனகாங்கி என்ற தேவமாதுக்கு தைமாதப் பிரதமை மகநக்ஷத்திரத்தில் சுதர்சன அம்சமாக ஒரு பிண்டம் பிறந்து பிரம்புப்புதரில் போட திருமால் அருளால் ஆண் உருவாகியவர், திருவாளன் என்ற வேளாளர் எடுத்து மனைவி பங்கயச் செல்வியிடம் கொடுக்க பால் சுரந்தது குழந்தை அதை உண்ணாது பசும்பால் காய்ச்சிக்கொடுக்க உண்டு வந்து, தன்னை வளர்த்தவர்களுக்கு ஆண் மகவு பிறக்க கருணை செய்து பாலில் மீதம் வைத்து அவர்களை உண்ணச் செய்து கணிகண்ணன் என்ற ஆண்மகவைப்பெற அருள் பாலித்தார். ஏழுஆண்டுக்குப் பின் சாக்கியம் சமண சமயங்களில் புகுந்து பிறகு உபயோகமில்லை என உணர்ந்து சைவ சமயத்தில் சிவ பாக்கியர் என்ற பெயருடன் இருந்து மயிலையில் பேயாழ்வாரைச் சந்திக்க அவர் நாராயண மந்திரத்தை உபதேசித்து ஸ்ரீ வைஷ்ணவர் ஆக்கினார். எழுநூறு ஆண்டு யோகம் செய்து தியானத்தில் இருந்தார். முதலாழ்வார் மூவரின் அருளும் பெற்றவர். திருக்கச்சி, திருவெஃகாவில் பலகாலம் இருந்தார். தானிருக்குமிடத்தை அலகு, மெழுக்கு, கோலமிட்டு வந்த ஒரு கிழமாதை கன்னியாக்கும் வரம் கொடுத்தார். பல்லவ வேந்தனுக்கு மனைவியான அவள் கணவனையும் இளமையாக்க எண்ணினாள் கணிகண்ணனிடம் ஆழ்வாரைச் சேவிக்க வேண்ட இணங்காத அவரை தன்மேல் கவிபாட பணிக்க

அதற்கும் மறுத்ததால் நாட்டை விட்டு போகச் சொல்ல ஆழ்வார் தானும் புறப்பட திருமாலும் கூட புறப்பட்டு ஓர் இரவு இருக்கை என்னும் ஊருக்குப்போக அரசன் அறிந்து அடிபணிந்து வேண்ட திரும்ப காஞ்சித் திரு வெஃகாவிற்கு மூவரும் வந்தார்கள். பெரும் புலியூரில் பிராமணர்கள் கீழ்ஜாதி ஆழ்வார் இருக்குமிடத்தில் வேதம் ஓதுதலை நிறுத்த மேல்ஓதமுடியாமல் நின்றுவிட ஆழ்வாரே அடியெடுத்து ஓதச் செய்தும் ஏளனம் செய்த யாகசாலை பிராமணர்கள் காண கும்பகோணத்தில் சாருப நிலையில் காட்சியளித்து நாலாயிரத்தி எழுநூறு வருட காலம் பூலோகத்தில் வாழ்ந்து பகவானை அனுபவம் அடைந்த படிகளை குறிப்பிட்டு நான்முகன் திருவந்தாதியும் திருச்சந்த விருத்தமும் பாடினர்.

### 5 நம்மாழ்வார்

பாண்டிநாடு - திருநகரி என்ற திருக்குருகூர்-வேளாளர்காரியாருக்கும், உடைய நங்கைக்கும் மகவாக, பகவான், கௌஸ்த்துபம், சேனை முதலியாரது, அம்சமாக, கலியுகம் பிறந்த 43-வது நாளான வைகாசி பௌர்ணமி வெள்ளிக்கிழமை விசாகத்தில் பிறந்தவர் பன்னிரெண்டாவது நாள்கோவிலுக்கு அழைத்துச் சென்று மாறன் என்று பெயரிட்டு புளியமரமாக வந்திருக்கும் அனந்தாழ்வார் நிழலில் வளர்த்து வந்தார்கள். 16-வது வயது வரை கண்விழியாது மௌனத்துடன் இருந்தார்; மதுரகவி வந்து கேள்வி கேட்க பேசினர். ருக்கு யஜுர், அதர்வணம், சாமவே தசாரமாக திருவிருத்தம் நூறும் திருவாசிரியம் ஏழும்

பெரிய திருவந்தாதி எண்பத்தி ஏழும் திருவாய்மொழி நூற்றி இரண்டும், அருளியவர். எல்லாச் சமயத்தவரும் போற்றும் இயல்புடையவராக இருந்தார் இவருக்கு காரிமாறன், சடகோபன் பராங்குசன், குருகைப்பிரான் வகுளாபரணன் தென்னரங்கன் பொன்னடி என்ற பெயர்கள் வழங்கிற்று. 31 ஆண்டுகள் திருப்புளியடியில் இருந்தார். மதுரகவியாழ்வார் இவர் பேரில் 11 பாசுரங்கள் பாடியுள்ளார். இவர் ஆழ்வாராகவும் ஆசிரியராகவும் மதிக்கப் பெற்றவர்.

### 6 மதுரகவியாழ்வார்

பாண்டிநாடு- திருக்கோளூர். திருக்குருகூர் சமீபம் கணேசரான குமுதர் கருடாழ்வார் அம்சமாய்த்தோன்றியவர். முன் குடுமிச்சோழிய அந்தணர். தமிழ்மொழி வடமொழிப் புலமைமிக்கவர். அதனுல் மதுரகவிராயர் என்ற பெயர் பெற்ருர். துவாரகையிலிருந்து தெற்கு நோக்கிப் பார்த்தபோது நம்மாழ்வார் யோகம் செய்து கொண்டிருந்த இடத்தில் ஜோதி பிரகாசிக்க அங்கு வந்து அவரைப் பேசவைத்து ஞான ஆசாரியராகப் பெற்றவர். தொண்டு செய்து 11 பாசுரம்கொண்ட பாமாலையும் பாடி அளவிலாத ஆசாரியபக்தியுடன் வாழ்ந்தார் நம்மாழ்வார் திருவடிநிலைக்கு மதுரகவிகள் என வழங்குவதுண்டு.

### 7 குலசேகராழ்வார்

சேரநாடு—கொல்லிநகர். கோழிக்கோடு—திடவிரத ராஜன் மகனுக மாசிமாத புனர்பூசத்தில் கவுஸ்துவ

அம்சமாய் திருவஞ்சிக்களத்திலே அவதரித்தவர். குல முறையாக ஆட்சிபுரிந்தார். தமிழகத்தின் சக்கரவர்த்தி யாகவும் இருந்தார். பாண்டிய மன்னனின் மகளை மணம்புரிந்தார். நாள்தோறும் இராமகாதை கேட்டு நிகழ்ச்சியில் ஒன்றி உணர்ச்சியுற்றவர். ராமபிரானிடம் பெரும்பற்றுடையவர். இவர் அருளிய பாசுரங்கள் 105. பெருமாள் திருமொழி எனப்பெயர் பெற்றது. முகுந்த மாலை என்ற வடமொழி நூலும் பாடியவர். 67-வது வயதில் பரமபதம் அடைந்தார். விஷ்ணு ஆலயத்தின் உள் வாசற்படி அவர் விரும்பியதுபோல குலசேகரன்படி என்று பெயரிடுவது இன்றும் வழக்கம்.

### 8 பெரியாழ்வார்

பாண்டிநாடு ஸ்ரீவில்லி புத்தூர் வேயர் குலம் முகுந்தாச்சாரியாருக்கும் பதுமையாருக்கும் ஆனிமாதம் சுவாதி நட்சத்திரத்தில் அவதரித்தார். விஷ்ணு சித்தர் எனப் பெயரிட்டனர். பாண்டியமன்னன் வல்லவதேவன் சபையில் பரதத்துவ நிர்ணயம் செய்து பொற்கிழி பெற்ருர். பட்டர்பிரான் எனப் பெயரும் பெற்ருர். வடபெருங்கோயிலுடையானுக்கு நாள்தோறும் புஷ்பம் தொடுத்து சாத்தி வந்தார். கிருஷ்ண அவதாரத்தில் பெரு விருப்புக்கொண்டு பெரியாழ்வார் திருமொழி 461 பாசுரமும், பல்லாண்டு 12-ம் பாடியதனல் பெரியாழ்வார் எனப் பெயர்பெற்ருர். ஸ்ரீவில்லிபுத்தூர் நகரத்தையும் சுற்றுப் புறமாகிய மல்லிவள நாட்டையும் நிறுவியவர். கோதையாகிய ஆண்டாளை மகளாகப் பெற்று 85 ஆண்டு வாழ்ந்தார்.

## 9 ஆண்டாள்

பாண்டிநாடு ஸ்ரீவில்விபுத்தூர் பெரியாழ்வார் நந்த வனத்தின் துளசிப் பாத்தியில் ஆடிமாதம் வளர்பிறைச் சதுர்த்தி பூரம், செவ்வாய் அன்று பூவைப் பிராட்டியார் அம்சமாய்த் தோன்றியவர். வடபெருங் கோவிலானுக்கு தயாரித்த மாலையைத்தான் அணிந்து அவருக்கு மனைவி யாகும் தகுதி உடையவளா என்று கண்ணுடியில் பார்த் ததை அறிந்த தந்தை கடிந்து, அன்று அந்த மாலையை சாத்தாதிருக்க திருமால் கனவில் தோன்றிக் கேட்டு அணிவிக்கச்சொல்லி அருளினுர். திருப்பாவை, நாச்சி யார் திருமொழி என்ற பிரபந்தங்கள் இயற்றினுர். அரங்க நாதனையே மணமகனுகப் பெற்ருர். ஸ்ரீரங்கத்திற்கு கோதையை அழைத்துவர ஸ்ரீவில்லிபுத்தூருக்கு மணிச் சிவிகை அனுப்பி வரவழைத்துத் தன் பக்கலில் சேர்த்து அருளினுர். பாண்டி வல்லவதேவன் ஸ்ரீவில்லிபுத்தூ ருக்கும் ஸ்ரீரங்கத்திற்கும் கல்யாண அலங்காரம் செய் வித்தார்.

## 10 தொண்டர் அடிப்பொடியாழ்வார்

சோழநாடு திருமண்டங்குடி மார்கழி கேட்டை. வைஜயந்தி என்ற வனமாலை, அம்சமாய் ஒரு முன்குடுமி பிராமணர் மகனுய்த் தோன்றினுர். விப்ரநாராயணன் நந்தவனம் வைத்து புஷ்பத்தொண்டும், திருத்துழாய் மாலை சாத்தி பிச்சை வாங்கி உண்டு மகிழ்ந்திருந்தார். உத்தமர் கோவில் தேவதேவி என்ற கணிகை மாது வசப்பட்டு செயல் மாறியது. அவளுக்கு ரெங்கநாதன்

அழகிய மணவாளதாசன் என்ற பெயருடன் பொற் கிண்ணம் அளித்து, இவர் கருமத்தை கழித்தற் பொருட்டுத் தண்டித்தபின் தொண்டர் அடிப்பொடியைக் கழுவிய தீர்த்தம் உட்கொண்டு வந்தார். திருமாலே திருப்பள்ளி யெழுச்சி பாடி 105 ஆண்டு வாழ்ந்து திரு நாட்டிற்கு எழுந்தருளினர்.

### 11 திருப்பாணுழ்வார்

சோழநாடு திருச்சி உறையூர் கார்த்திகை மாதம் ரோகினியில் ஸ்ரீவத்ஸத்தின் அம்சமாய் நெற்பயிர்க் கதிரிலே அவதரித்தார். பஞ்சமசாதி பாணர் குலத் தான் எடுத்து வளர்த்தான் குலத்துக்கேற்ப யாழ்ப் பாடலில் தேர்ச்சி பெற்ருர். தெற்குக் காவிரித் தென் கரையில் நின்று ரெங்கநாதனை திசைநோக்கி கண்டமும் கருவியும் ஒன்று சேரப் பாடிவந்தார். திருமஞ்சன நீர் எடுத்த முனிவர் வழியில் விலகாது நின்ற பாணரின் மேல் எறிந்த கல் நெற்றியில் பட்டு துன்புறுத்தியது அவர் உணர்வின்றி மெய்மறந்து பாடிக்கொண்டிருந் தார், ரெங்கநாதன் நெற்றியில் ரத்தம் வந்தது. எல் லோரும் திகைப்புற ரெங்கநாதன் அந்த முனிவரைச் சென்று தோளில் தூக்கி வரச்செய்தார். அந்த நேரமே திருமாலின் சேவை பரிபூரணமாகப் பெற்று திருமேனி யழகை 10 பிரபந்தமாகப் பாடினர். 50 ஆண்டுகாலம் வாழ்ந்து பெருமாளோடு இரண்டறக் கலந்தார்.

### 12 திருமங்கையாழ்வார்

சோழநாடு (திருமங்கைநாடு) திருவாலி திருநகரி என்ற திருக்குறையலூர் கள்ளர் குலம் சோழராஜன்

சேனுதிபதி மகனுக கார்த்திகை மாத கார்த்திகையில் சார்ங்கம் என்ற விஷ்ணு கார்முகத்தின் அம்சமாய் அவதரித்தார். நீலன் எனப் பேர்பெற்று போர்த் தொழில் ஏற்றத்தால் பரகாலன் எனப்பட்டப் பெயர் பெற்ருர். குருநில மன்னனுக்கி முடிசூட்டப்பெற்ருர் இசையிலும் நடனத்திலும் முழுநாட்டம் கொண்டவர். திருநாங்கூர் திருவெள்ளக்குளத்திற்கு வந்து குமுத வல்லி என்ற தேவமாதுவை மணக்க விரும்பினுர். கற்றறிந்த வைணவர்களுக்கு அன்றி. மற்றை யாருக்கும் மனைவியாகேன்? என்று சொல்ல நாங்கூர் பிரான் கருணையால் சங்குசக்கர முத்திரை பொறித்து தொண்டராகியதும் ஓராண்டளவும் நாள்தோறும் ஆயிரத்தி எட்டு வைணவர்களுக்கும் அன்னமிட்டு சேடத்தையும் திருவடித் தீர்த்தத்தையும் உண்ணுவ தான ஒப்பந்தத்தின் பேரில் திருமணம் நடந்தது.

சோழமன்னனுக்குச் செலுத்தவேண்டிய வரிப் பணம் செல்லாகாது. நாள்தோறும் பிராமணபோஜனம் நடப்பதை அறிந்த அரசனின் ஏவலாளர் வந்து, ஓடிய பின், தானேவந்து போர்தொடுத்து சிறைவைத்திருந்த பொழுது உணவின்றி மூன்று நாள் பட்டினி கிடக்க காஞ்சி பேரருளாளப் பெருமாள் பணம் தருவதாகக் காஞ்சிக்கு அழைக்க, அரசின் அனுமதியுடன் வந்து வேகவதி நதிக்கரையில் பொருள் பெற்று அரசிறை அளித்ததும், அரசன் பயந்து ஆச்சரியமுற்றதும் அந்த பொருள் பூராவும் பாகவதர்களுக்கு அளித்து பாவம் தீர்ருன். எல்லாம் செலவாகியபிறகு சூரையாடிக் கொணர்ந்த பொருளால் தத்தியாராதனம் நடத்தி

வந்தார். நாராயணனே மணக்கோலத்தில் வந்து நகைகளைப் பறிகொடுத்தார். மிஞ்சியைக் கடித்து எடுத்ததினுல் கலியன் எனப் பெயர் பெற்ருர், அஷ்டாட்சரத்தை உபதேசித்து திருமகளோடு சேவை சாதித்தருளினுர். வேதம் நான்குக்கும் நம்மாழ்வார் அருளிய பிரபந்தங்களின் அங்கமாக பெரியதிருமொழி, திருக்குருந்தாண்டகம் திருநெடுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, பெரியதிருமடல், சிறிய திருமடல் என்னும் 6 பிரபந்தங்கள் திருவாய் மலர்ந்தருளித் திருமங்கையாழ்வார் என்று நாமம் பெற்று 105 ஆண்டு வாழ்ந்து சமாதியோகத்தில் திருநகரம் சேர்ந்தார் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்ற நான்குவிதக் கவிகளால் அருளிச்செய்து சிறப்புற்றவர் திருஞானசம்பந்தரை சீர்காழியில் சந்தித்து அளவளாவியவர்.

வையம் புகழ் பொய்கை மாறன் மதுரகவி
ஐயன்மழிசைமன்கோழியர்கோன்அருட்பாண்பெருமான்
மெய்யன்பற் கால்ப்பொடி விண்டு சித்தன்வியன் கோதைவெற்றி
நெய்யங்கை'வேற்கலியன் தமிழ்வேதம் என்றும் நிலை நிற்கவே

# நாலாயிரத் திவ்ய ப்ரபந்தம் அருளிச் செய்த ஆழ்வார்கள்

| ஆழ்வார்கள் பெயரும் வரிசையும் | ப்ரபந்தங்கள் விபரம் | பாசுரம் |
|---|---|---|
| 1 பொய்கையாழ்வார் | முதல் திருவந்தாதி | க00 |
| 2 பூதத்தாழ்வார் | இரண்டாம் திருவந்தாதி | க00 |
| 3 பேயாழ்வார் | மூன்றும் திருவந்தாதி | க00 |
| 4 திருமழிசைப்பிரான் | திருச்சந்த விருத்தம் | க௨0 |
| ,, | நான்முகன் திருவந்தாதி | கூசு |
| 5 மதுரகவியாழ்வார் | கண்ணினுண் சிறுத்தாம்பு | கக |
| 6 நம்மாழ்வார் | திருவிருத்தம் | க00 |
| ,, | திருவாசிரியம் | எ |
| ,, | பெரிய திருவந்தாதி | அஎ |
| ,, | திருவாய்மொழி | கக0௨ |
| 7 குலசேகராழ்வார் | பெருமாள் திருமொழி | க0௫ |

| | | | |
|---|---|---|---|
| 8 | பெரியாழ்வார் | திருப்பல்லாண்டு | கஉ |
| | ,, | திருமொழி | சசுக |
| 9 | ஆண்டாள் | திருப்பாவை | ங0 |
| | ,, | திருமொழி | கசங |
| 10 | தொண்டரடிப்பொடிஆழ்வார் | திருமாலை | சரு |
| | ,, | திருப்பள்ளி எழுச்சி | க0 |
| 11 | திருப்பாணாழ்வார் | அமலனாதிபிரான் | க0 |
| 12 | திருமங்கையாழ்வார் | பெரிய திருமொழி | க0அச |
| | ,, | திருக்குறுந்தாண்டகம் | உ0 |
| | ,, | திருநெடுந்தாண்டகம் | ங0 |
| | ,, | திருவெழுகூற்றிருக்கை | க |
| | ,, | சிறிய திருமடல் கண்ணி | எஎஇ |
| | ,, | பெரிய திருமடல் கண்ணி | கசஅஇ |
| | | | ச000 |

## திருமுறைபன்னிரண்டு திருவாய்மலர்ந் தருளியவர்கள்

| | பெயர் | திருமுறைகள் | நூல்பெயர் | பாடல்கள் |
|---|---|---|---|---|
| 1 | திருஞானசம்பந்தர் | 1—2—3 | தேவாரம் | 4158 |
| 2 | திருநாவுக்கரசர் | 4—5—6 | ,, | 3066 |
| 3 | சுந்தரர் | 7 | ,, | 1025 |
| 4 | மாணிக்கவாசகர் | 8 | திருவாசகம்<br>திருக்கோவையார் | 658<br>400 |
| 5 | திருமாளிகைத்தேவர் முதலிய ஒன்பதின்மர் | 9 | திருவிசைப்பா<br>திருப்பல்லாண்டு | 288<br>13 |
| 6 | திருமூலர் | 10 | திருமந்திரம் | 3047 |
| 7 | திருவாலவாயுடையார் முதலிய பன்னிருவர் | 11 | பிரபந்தமாலே | 1388 |
| 8 | சேக்கிழார் | 12 | பெரியபுராணம் | 4286 |
| | | | | 18329 |